

# குமுத வாசகம்

படிவம்—௧

(சிறப்புப் பகுதி)

வித்துவான் பாலூர். து. கண்ணப்ப முதலியார்.

---

டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு ஸன்ஸ்,
2, பிலிப்ஸ் தெரு, சென்னை—1.



[விலை அணா 8

# குமுத வாசகம்



டி. வி. செல்லப்ப சாஸ்திரி & ஸன்ஸ்

சென்னை 1.

# குமுத வாசகம்

முதற் படிவம்

(சிறப்புப் பகுதி)

ஆசிரியர்

வித்துவான், பாலூர். கண்ணப்ப முதலியார், B. O. L.,

தமிழ்த்துறைத் தலைவர்

நியூகாலேஜ், இராயப்பேட்டை, சென்னை-14

வெளியிட்டவர்

டி. வி. செல்லப்ப சாஸ்திரி அண்டு ஸன்ஸ்

சென்னை-1

 [விலை அணா 8

# முன்னுரை

'குமுத வாசகம்' என்னும் பெயருடன் வெளி வந்துள்ள இந்நூல் சென்னை அரசியலார் புதிதாக வெளியிட்டுள்ள 1951-ஆம் ஆண்டு பாடதிட்டத்தின்படி எழுதப் பட்டுள்ளது. இது தமிழையே சிறப்புமொழியாக மாணவர்கள் படிப்பதற்குரிய சிறப்புப் பகுதியை மட்டும் தன்னகத்தே கொண்டு திகழ்கிறது.

இலக்கணப் பாடத்தைத் தனித்துப் பயில்வதினும், உரைநடைப் பாடத்தோடு தொடர்ந்து பயிலின், அப் பாடத்தில் ஓர் உணர்ச்சியும் ஊக்கமும் தோன்றும் எனக் கருதி, ஒவ்வோர் உரை நடைப் பகுதியின் கீழும் இலக்கணப் பாடம் எழுதப்பட்டு இருப்பது, மாணவர்கள் தம் தமிழ் அறிவைச் செம்மையுடன் பெறப் பெருந்துணையாகும் என்பதில் ஐயமில்லை.

அறிவு வளர்ச்சிக்குரிய பல திறப் பாடங்களும், ஒவ்வொரு பாடத்தின் முடிவிலும் விஞக்களும், பயிற்சியும், வேண்டிய அளவுக்குக் குறிப்புரையும் இந்நூல் தன்கண் கொண்டிருத்தலால், "பொன்மலர் நாற்றம் உற்றுற்போல்" மாணவர்கள் ஆயாசம் இன்றிப் பாடங்களை நன்கு உணர்ந்து, தம் மனத்தில் பதிய வைத்துக் கொள்வர் என்பதை அறுதியிட்டு உறுதியாகக் கூறலாம்.

இந்நூலில் காணும் பாடல்கள் சிலவற்றை இதில் இணைத்துக்கொள்ளத் தம் இசைவைத் தெரிவித்த உரிமையாளர்கட்கு என் நன்றியுள்ள வணக்கம் உரித்தாகுக.

இந்நூலைத் தமிழ் உலகம் ஏற்று, என்னை ஆதரித்து ஊக்கம் அளிக்க வேண்டுகிறேன்.

ஆக்கியோன்

# உள்ளுறை

## உரைநடை



## செய்யுள்

# தேசீய கீதம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா

ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

ஜயஹே ஜயஹே ஜயஹே
ஜய ஜய ஜய ஜயஹே

—மகாகவி இரவீந்திரநாத தாகூர்.

# நாட்டு வணக்கம்

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான்
மக்கள் எல்லாருடைய மனத்திலும் ஆட்சி
செலுத்துகிறாய்.

நின் திருநாமம், பஞ்சாப்பையும் சிந்துவையும் குஜராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத்தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சியடையச் செய்கிறது.

அது விந்திய, ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;

யமுனை, கங்கை நதிகளின் இன்பநாதத்தில் கலக்கிறது;

இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது.

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன;

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு
வெற்றி, வெற்றி, வெற்றி.

# 1. தைரிய நாதர்

1. தமிழ் மொழி தமிழர்களை மட்டும் இன்பத்துல ஆழ்த்தவில்லை. தமிழர் அல்லாதவர்களையும் இன்பத்தில் அழுந்த வைத்திருக்கிறது. அப்படி அழுந்திய வர்களுள் ரெவரெண்டு பெஸ்கி என்னும் இத்தாலிய தேசத்து அறிஞரும் ஒருவர் ஆவார்.

2. ரெவரெண்டு பெஸ்கிப் பெரியார் வட இத்தாலி தேசத்தில் வெனிஸ் நகருக்கு மேற்கே காஸ்டிக்கிலியானி என்னும் பட்டினத்தில் கத்தோலிக்கக் கிறிஸ்தவ மதத்தில் கி. பி. 1680-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 8-ஆம் தேதி பிறந்தார். இவரைப் பெற்றோர்கள் கண்ணும் கருத்துமாய் வளர்த்து வந்தனர்; இவரை ஆரம்பப் பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிவைத்தனர். அப்பள்ளியில் லத்தீன், கிரீக் மொழிகளை இவர் பயின்று வந்தார். இவருக்கு இளம் பருவ முதலே கல்வியில் மிகவும் ஆர்வம் இருந்தது. அதனால், பள்ளிக்கூடத்திற்குக் காலந் தவறாமல் போய்வந்தார்; ஆசிரியர் கூறியதை உற்றுக் கவனித்து வந்தார். இந்த நற்பழக்கம் இளமை முதல் இவரிடம் இருந்து வந்ததால், இவர் எல்லோராலும் நன்கு பாராட்டப்பட்டுப் படிப்பில் ஒவ்வொரு வகுப்பிலும் முதன்மையாகத் தேர்ந்து வந்தார். ஆரம்பப் பாடசாலையில் படிக்கவேண்டியவற்றை எல்லாம் படித்து முடித்துவிட்டுக் கலாசாலையை அடைந்து, மேல் படிப்புப் படிக்கத் தொடங்கினர். இவருக்கு இளமை முதல் கல்வியில் ஏற்பட்ட பற்றைப் போலவே, தாம் பிறந்த கிறிஸ்து மதத்தில் பெரும் பற்று வாய்ந்தவராய் இருந்தார். அம்மதத்தை எங்கும் பரவச் செய்ய எண்ணமுங்

கொண்டார். அதனாலும், இவரை அந்நாட்டார் கொண்டாடத் தொடங்கினர்.

3. மதப்பிரசாரத்தை நாடெங்கும் செய்ய வேண்டும் என்று எண்ணங்கொண்ட ரெவரெண்ட் பெஸ்கி, அதற்குரிய மத நூல்களை நன்கு கற்றுத் தேர்ந்தார். கற்றவற்றைப் பலர் முன்னிலையில் பேசியும் வந்தார்.

4. இவருடைய சொல்மாரி எல்லோருடைய மனத்தையும் கவர்ந்தது. இளைஞராக இருக்கும்போதே இவர் இவ்வளவு தைரியமாகச் சபையில் பேசும் ஆற்றல் படைத்து விட்டனரே என்ற காரணத்தால் இவரைத் **தைரியநாதர்** என்றும் அழைக்கத் தொடங்கினர். இப்படி இவர் பிரசங்கம் செய்து மக்கள் உள்ளத்தைக் கவர்ந்ததைக் கண்ட கத்தோலிக் குருமார் சிலர், இவரை வெளி நாடுகளில் கத்தோலிக்க மதக் கொள்கைகளைப் பரவச் செய்யும்படி வேண்டிக்கொண்டனர். அவ்வேண்டுகோள் படி இவர் 1706-ஆம் ஆண்டு இந்தியாவுக்கு வந்து சேர்ந்தார். அப்படி இவர் வந்தபோது இவருக்கு வயது இருபத்தாறு. இவர் முதல் முதல் இந்தியாவில் வந்து தங்கிய இடம் கோவா பட்டினமாகும். அதன்பின் திருநெல்வேலி ஜில்லாவை அடைந்தனர். அங்குள்ள நில வளனும், தாம்பரபரணியின் ஆற்றுவளனும் இவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டமையால், அங்குத் தங்கித் தாம் வந்த நோக்கமாகிய மதப் பிரசார வேலையைத் துவக்கத் தொடர்ந்து நடத்தலானார்.

5. ரெவரெண்ட் பெஸ்கியாகிய தைரியநாதர் தங்கி இருந்த இடம் திருநெல்வேலியாதலாலும், திருநெல்வேலி தமிழ் நாட்டைச் சார்ந்ததனாலும் தமிழ் மொழியைத் தாம் நன்கு படித்திருந்தால் அன்றித் தாம்

மத உண்மைகளை அங்குள்ளவர்களுக்குப் போதிக்க முடியாது என்பதை உணர்ந்தார். அதன் பொருட்டுத் தகுந்த தமிழ் அறிஞரை நாடினார்; அவர்களிடம் முறையாகத் தமிழ் மொழியில் உள்ள இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தார்; தம் பெயரையும் மாற்றி



**வீரமாமுனிவர்** எனக் குறித்துக் கொண்டார்; காவியுடை தரித்தார்; புலால் உணவை ஒழித்தார்; பல்லக்கில் ஏறிப்போகும் பழக்கத்தைக் கைக்கொண்டார். பார்ப்பவருக்குச் சிறந்த சந்நியாசிபோலக்காணப்பட்டார். கோலத்திற்கு ஏற்ற குணமும் இவரிடம் பொருந்தியிருந்தது. இவருடைய முகம் புன்னகை கொண்டு விளங்கும். விழிகள் அருளுடன் கூடிக் காணப்படும். இந்தத் தோற்றப் பொலிவோடு திருநெல்வேலி ஜில்லாவைச் சார்ந்த வடக்கன்குளம், காமநாயக்கன்பட்டி, கயற்றாறு போன்ற இடங்கட்குச் சென்று சமயச் சொற்பொழிவுகளைச் செய்து வந்தார்.

6. "அறிவுடை ஒருவனை அரசும் விரும்பும்" என்பது நம் நாட்டுப் பழமொழியல்லவா? வீரமாமுனிவருடைய அறிவையும் ஆற்றலையும் கண்ட சந்தா சாகிப் இவரை வரவழைத்துத் தம் ஊரிலேயே இருக்கச் செய்து, மந்திரிப் பதவியையும் கொடுத்தனர். பதவி கொடுத்ததோடு நில்லாமல் தமக்குச் சொந்தமான திருச்சி ஜில்லாவைச் சார்ந்த பொக்கலம், அரசூர், மால்வாய், நல்லூர் முதலிய ஊர்களையும் இனமாகத் தந்தார். இவ்வளவு சீரும் சிறப்பும் பெற்ற போதும் தம் துறவுக் கோலத்தை மட்டும் இவர் விட்டிலர். இவ்வாறு முஸ்லீம் மன்னர் தந்த பொருளைக் கொண்டும் தம் கைவசம் இருந்த செல்வத்தைக் கொண்டும் தமிழ் நாட்டில் கல்வி பரவுவதற்கு உதவி புரிந்தார்.

7. வீரமாமுனிவர் ஓய்ந்த நேரங்களை வீணுக்குவதில்லை. தமிழ்மொழியையே நன்கு படித்து வந்தார். இவருக்குத் திருக்குறள், சீவகசிந்தாமணி, கம்பராமாயணம் முதலான நூல்களில் நல்ல பயிற்சியுண்டு. அப்பயிற்சியைத் தமிழ்த் தாய்க்கே பயன்படுத்தினர். தம்மத சம்பந்தமாக ஒரு காவியம் இருத்தல் நலம் எனக் கருதித் தேம்பாவணி என்னும் சீரிய காவியத்தைப் பாடி முடித்தார். இது இயேசுப் பெருமான் வரலாற்றை ஆதியோடந்தமாகக் கூறும் நூல்; கற்போருக்குக் கழி பேர் உவகை கொடுக்க வல்லது. பொழுது போக்குக்காகவும் இன்பம் எய்தற் பொருட்டாகவும், பரமார்த்த குருகதை என ஒரு நூலையும் எழுதினர். இதைப் படிக்கப்படிக்க விடா நகைப்பு ஏற்படும். தமிழ் இலக்கணங்கள் எல்லாம் பாட்டு வடிவில் உண்டு. ஆனல், இவர் அவ்விலக்கணத்தை உரை நடையில் எழுதி அதற்குத் தொன்னூல் விளக்கம் என்னும் பெயர் கொடுத்தார்.

இது இலக்கணம் பயில்வோர் எளிதில் உணர்தற்கு ஏற்ற துணைக் கருவியாகும். இந்நூல்களே அன்றி, வேதியர் ஒழுக்கம், சதுர் அகராதி முதலியவற்றை யும் இவர் எழுதியுள்ளார்.

8. மாணவர்களே! அயல்நாட்டில் பிறந்து, அம் மொழியில் பழகிய இவர் தமிழ்மொழி பயின்று தமிழ்த் தாய்க்குப் பெருந்தொண்டு செய்ததை நாம் பாராட்டா மல் இருக்க முடியுமா? இத்தகைய தமிழ்த் தொண்டர் பாண்டியநாட்டில் மணப்பாறை என்னும் ஊரில் 1740-ல் இம் மண்ணுலகு விடுத்து, விண்ணுலகு அடைந்தார்.

## அருஞ் சொற்கள்

ஆர்வம் - ஆசை. பற்று - ஆசை. பிரசாரம் - விளம்பரம். சொல் மாரி - சொல் மழை. ஆற்றல் - வன்மை. பிரசங்கம்- சொற்பொழிவு. புலால் - மாமிசம். கோலம் - அலங்காரம். பொலிவு - அழகு. காவியம் - கதையைக் கூறும் செய்யுள் நூல். கழிபேர் உவகை - மிகுந்த மகிழ்ச்சி. அகராதி - சொற்களுக்கு அகரவரிசையில் பொருள் அறிவிக்கும் ஒரு தொகுப்பு நூல். விண்ணுலகடைந்தார் - இறந்தார்.

## கேள்விகள்

1. ரெவரெண்டு பெஸ்கிப் பெரியார் எங்கு எப்போது பிறந்தார்?
2. இவருக்கு 'வீரமா முனிவர்' எனப் பெயர் வரக் காரணம் என்ன?
3. இவர் எப்பொழுது ஏன் இந்தியாவிற்கு வந்தனர்?
4. இவர் ஏன் தமிழ் மொழியைப் பயின்றார்?

5. இவர் இந்தியாவில் தம் வாழ்வை எவ்வாறு நடத்தினர்?
6. இவர் எவ்வரசரால் எம் முறையில் பாராட்டப்பட்டார் ?
7. இவர் உள்ளத்தைக் கவர்ந்த நூல்கள் எவை ?
8. இவர் எங்கு இறந்தனர் ?

## பயிற்சி

1. ரெவெரண்டு பெஸ்கி போன்ற வேறு ஒரு கிறிஸ்தவத் தமிழ்த் தொண்டரைக் குறிப்பிடு.
2. தேம்பாவணி, சீவக சிந்தாமணி, கம்பராமாயணம் — இவற்றைப் பற்றிச் சிறு குறிப்பு வரைக.
3. இவர் எழுதியுள்ள உரைநடை நூல்களை எடுத்துக் காட்டு.
4. சதுர் அகராதி என்னும் பெயர் அந்நூலுக்கு ஏன் அமைந்தது என்பதை அறிந்து எழுது.

## இலக்கணம்

நீங்கள் கண்களால் எழுத்துக்களைக் காண்கின்றீர்கள் அல்லவா ? அவை எவ்வாறு காணப்படுகின்றன ? வரி வடிவில் காணப்படுகின்றன. ஆகவே, அவற்றை என்ன எழுத்துக்கள் என்னலாம் ? வரி எழுத்துக்கள் என்னலாம் அல்லவா ?

நாம் ஒருவரோடு ஒருவர் பேசும்போது நம் காதுகளில் ஒலிகள் விழுகின்றன. அவற்றால் பொருள் விளங்கிக்கொள்கின்றோம். இம்மாதிரியான ஒலிகள் ஒலி எழுத்துக்கள் எனப் படும்.

இந்த ஒலி எழுத்துக்களும் வரி எழுத்துக்களும் உயிர், மெய், ஆய்தம், உயிர்மெய் எனப்படும். அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ, என்பன — உயிர் எழுத்துக்கள், இவை பன்னிரண்டு. க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன் — இவை மெய் எழுத்துக்கள். மெய்யெழுத்துக்களுக்குத் தலையில் புள்ளியுண்டு. இவை பதினெட்டு. 'க' என்னும் எழுத்தில் இரண்டு எழுத்துக்கள் இணைந்து இருக்கின்றன.

க்+அ=க. 'க்' மெய் எழுத்து, 'அ' உயிர் எழுத்து. இவ்விரண்டும் சேர்ந்த எழுத்தே 'க' என்பது. ஆகவே, உயிரும் மெய்யும் சேர்ந்து உண்டாகும் எழுத்து, உயிர் மெய்யெழுத்துக்களாம். அவை இருநூற்றுப்பதினாறு.

ஃ இந்த வடிவமான எழுத்து ஆய்த எழுத்து. இது ஒரே எழுத்தாகும்.

## பயிற்சி

1. "அவர்களே உலகமக்கள் ஒவ்வொருவர் உள்ளத்திலும் இடம் பெறுபவர் என்பதே அவ்வுண்மையாகும்." இவ்வாக்கியத்தில் வந்துள்ள ஒவ்வோர் எழுத்தையும் தனித்தனி எடுத்து எழுதி இன்னின்ன பெயருடைய எழுத்தெனவும் குறிப்பிடு.
2. ஆய்த எழுத்து அமைந்த சொற்கள் மூன்றைக் குறிப்பிடு.
3. பள்ளிக்கூடத்திற்குக் காலந் தவறாமல் போய் வந்தார் — இதில் வந்துள்ள உயிர்மெய் எழுத்துக்களை உயிர் வேறு, மெய் வேறாகப் பிரித்துக்காட்டு.

# 2. நகைச் சுவைத் தொடர்

1. புலவர்கள் சமயோசிதம்போலச் சமத்கார மாகப் பேசவல்லவர்கள். அப்பேச்சுக்கள் நல்ல பொருள் பொருந்தினவாகவும், நகைச்சுவை தருவனவாகவும் இருக்கும். மேல் போக்கில் ஒரு பொருளும், சிறிது சிந் தித்துப் பார்க்கையில் வேறு பொருளும் காணப்படும். அதற்குச் சில எடுத்துக்காட்டுக்களைக் காட்டினால் நீங்கள் சிரிக்கக் கூடாது என்று விரதம் கொண்டிருந் தாலும், அவ்விரதத்தைக் கெடுத்துக் கொண்டாகிலும் நகைத்தே விடுவீர்கள். ஏதோ இப்பொழுது சொல்லப் போகும் நிகழ்ச்சிகளைப் படித்து நகைக்காமல் இருங்கள் பார்க்கலாம்.

2. ஏழுமலை என்னும் மாணவன் பள்ளியில் படித்து வந்தான். அவன் தன் படிப்பை முடித்துக்கொண்டு ஓர் உத்தியோகத்தில் வேலையும் பார்த்து வந்தான். சம்பாதிக்கத் தொடங்கினால் உடனே கலியாணம் செய்து விடுவது நம் நாட்டு வழக்கம் அல்லவா? அதற்கு ஏற்றாற்போல் அவனுக்கு வயதும் ஆகியிருந்தது. திரு மணநாள் குறிப்பிடப்பட்டது. திருமண இதழும் அச் சிடப்பட்டது. அவற்றுள் சிலவற்றை ஏழுமலை எடுத் துக்கொண்டு தனக்குக் கல்வி கற்பித்த ஆசிரியர்மார் களுக்கும், உடன் பயின்ற நண்பர்களுக்கும் அளித்துத் தன் திருமணத்திற்கு வருமாறு அழைத்துத் தன்னைக் கௌரவிக்கும்படி வேண்டினான்.

3. திருமணமும் சிறப்பாகத் தொடங்கியது. அவன் திருமணத்திற்கு அவன் வகுப்பு ஆசிரியர்

வந்திருந்தார். அவரை மணமகன் கண்டான். அவர் தன் ஆசிரியர் என்று அறிந்தும், அவனுடைய முன்னேற்றத்திற்கு அவரே காரணம் என்பதை உணர்ந்திருந்தும், அவருக்கு எழுந்து வணக்கம் செய்து நன்முறையில் வரவேற்காமல், உட்கார்ந்தபடியே வணக்கம் செலுத்தி வரவேற்ருன். அதைக் கவனித்த அவனுடன் பயின்ற அருமைத்தோழன் மாணிக்கம் என்பவன், "என் நண்பா,



நம் ஆசிரியர் அன்புடன் உன் அழைப்புக்கு இணங்கி உன் திருமணத்திற்கு வந்திருக்கிருர். அவருக்கு எழுந்து வணக்கம் செலுத்தி வரவேற்காமல் உட்கார்ந்தபடியே வணக்கம் செலுத்துகிருயே. இதுமுறையோ ?" என்று கூறிச் சிறிது கடிந்து கொண்டான்.

4. ஆசிரியர் அறிஞர் அல்லவா? மணமகனுக்கு நல்ல முறையில் சூடுகொடுக்கவேண்டும் என்று எண்ணி னர். அதையும் நாகரிகமான முறையில் செய்ய எண்ணி னர். உடனே மாணிக்கம் என்பவனைப்பார்த்து, "தம்பி, அதுவேசரி" என்று கூறினர். இதைக்கேட்டதும் அங்கு வந்திருந்த தமிழ் ஆசிரியர் கொல்லென்று சிரித்தார். ஏன் திடுமெனத் தமிழாசிரியர் சிரிக்கிருர் என்பதைப் புரிந்து கொள்ளாமல், மாணிக்கம் திகைத்தான். ஏழு மலையும் திகைத்தான். மெல்ல தமிழாசிரியரிடம் சென்று 'ஐய' நீர் ஏன் சிரித்தீர். அதுவேசரி என்று அவ்வாசிரி யர் கூறியதில் என்ன அப்படி நகைக்குரிய பொருள் இருக்கிறது? தயவு செய்து கூறுங்கள் என்று வேண் டிக்கொண்டான்.

5. தமிழ் ஆசிரியர் மீண்டும் நகைத்து, "ஆசிரியர் வெகு அழகாகப் பதில் உரைத்தார். அதுவேசரி என்னும் தொடரில் ஏழுமலை உட்கார்ந்து கொண்டே வணக்கம் செய்ததே சரியானது என்ற ஒரு பொருளும், அது வேசரி என்று வேறு வகையில் பிரித்துக் காண்கையில், அது கோவேறு கழுதை; அதற்கு மரியாதை தெரியவில்லை— என்னும் மற்ருெரு பொருளும் தோன்றச் சமத்காரமாக, அதுவேசரி என்று கூறினர். அதனல் தான் நான் சிரித்தேன்," என்று பதில் கூறினர்.

6. மாணிக்கமும், அவனுடன் இருந்த ஏனைய நண் பர்களும் சேர்ந்து விழுந்து விழுந்து சிரித்தனர். ஏழு மலைக்கும் சிரிப்புத் தாங்க முடியவில்லை. "ஐயா என்னை இங்குமா இப்படி அவமானப்படுத்த வேண்டும்? நான் செய்தது தவறுதான்" என்று கூறி மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். அங்கு வந்தவர்களும், உணவு விருந்துக்கு

முன், சொல்விருந்து கிடைத்தமைக்கு மகிழ்வு எய்தினர். ஆசிரியர்கள் அவனை வாழ்த்தித் திருமணத்தில் புத்தகம் ஒன்றைப் பரிசிலாக அளித்து உணவு உண்டு சென்றனர்.

## அருஞ்சொற்கள்

எடுத்துக் காட்டு - உபமானம். திருமண இதழ் - கலியாணப் பத்திரம். வேசரி - கோவேறு கழுதை. எய்தினர் - அடைந்தார்.

## கேள்விகள்

1. ஏழுமலை ஏன் ஆசிரியரைத் தன் வீட்டுக்கு வரவழைத்தான்?
2. ஏழுமலை செய்த தவறு யாது?
3. அதுவேசரி என்னும் தொடரில் அமைந்த நகைச் சுவை பொருள் யாது?
4. ஆசிரியர்கள் நன்மனம் படைத்தவர்கள்என்பது எதனால் புலனாகிறது?

## பயிற்சி

1. நகைச்சுவை தோன்றப் பாடக்கூடிய புலவர் ஒருவரைக் குறிப்பிடு.
2. புத்தியில்லாதவன், காசாலேசா - இத்தொடரை இரு பொருள்படப் பிரித்துக் காட்டிப் பொருளும் கூறு.

## இலக்கணம்

### பகுதி

கூனன், பொன்னன், செய்தான் — இந்த வார்த்தைகளைப் பிரித்தால் எப்படிப் பிரியும் என்பது உங்கட்குத் தெரியுமா? இவை

கூன் + அன்

பொன் + ன் + அன்

செய் + த் + ஆன்.

எனப் பிரியும். இவற்றுள் முன்னுள்ள சொற்கள் யாவும் பகுதி யாகும். பகுதியைப் பிரித்து எடுக்கும்போது கண்டபடி பிரித்தல் கூடாது. பொருள் இருக்கும் முறையில் பிரித்துக் கொள்ள வேண்டும். இப்படிப் பிரிக்கக்கூடிய பதங்கள் பகுபதங்களாம். பிரிக்கக் கூடாத பதங்கள் பகாப்பதங்களாம். மண், பொன், என்பன பகாப்பதங்கள்.

## பயிற்சி

1. பெண், பிறந்தது, நாட்கள், அன்பு, வரன், பொருள், ஆரம்பித்தார், செவிடன், வந்தார், உணர்ந்தான்— இச்சொற்களில் இன்ன பகுபதம் இன்ன பகாப்பதம் என்பதைக் குறித்துக் காட்டு.

2. இப்பாடத்தின் மூன்ருவது பாராவில் வந்துள்ள பகுபதங்களை எடுத்து எழுதிப் பகுதியையும் குறிப்பிடு.

3. ஏழாவது பத்தியில் வந்துள்ள பகாப்பதங்களை எடுத்துக் காட்டு.

# 3. ஒரு சிறு நாடகம்

## வளர்ப்புப் பிள்ளை

### அங்கம் 1

இடம்: *ஒரு பெரிய மாளிகையில் ஓர் அறை.*

காலம்: *முற்பகல்.*

நடிகர்கள்: *தனபதி செட்டியார், அவர் மனைவியார் சுசீலை.*

செட்டியார் :—'*கண்மணி! நமக்குப் பொருள் செல்வம் இருந்து யாது பயன்? புத்திரச் செல்வம் இல்லையே.*

புத்திரப் பேறு இல்லாதது தாமரை இல்லாக் குளமும், மந்திரியில்லா அரசும், கண்ணில்லா யாக்கையும், புலவர் இல்லாச் சபையும் போன்றது என்று பெரியோர் கூறுவர் அல்லவா ?

**மனைவியார்** :—நாத ! இதன்பொருட்டுத் தான தருமம் செய்தோம். தீர்த்த யாத்திரை, தல யாத்திரை செய்தோம். ஒன்றாலும் புத்திரப்பேறு பெற்றி லோம். நிதியும் கணவனும் நேர்படினும் தம் தம் விதியின் பயனே பயன் என்பது பொய்க்குமோ?

**செட்டியார்** :—சுசீலா ! எனக்கு ஓர் எண்ணம் தோன்று கிறது. என் தங்கையின் குழந்தையை நாம் எடுத்து வளர்த்துக் கொண்டால் என்ன ?

**மனைவியார்** :—பிராணபதி ! உம் யோசனைக்கு மறு யோசனை யுண்டா ? அப்படியே செய்யுங்கள். உம் தங்கையாரும் ஆதரவற்றிருக்கிறார். அவ்வம்மை யார் குழந்தையை நாம் வளர்ப்பு மகனாகக் கொண் டால், அவ்வம்மையாரை ஆதரித்ததாகவும் ஆகும்.

[அப்படியே சில ஆண்டுகள் வளர்த்து வந்தனர். பின் தனபதி செட்டியார் அடுத்த பிறவியிலேனும், பிள்ளைப்பேறு பெறத் தம் மனைவியோடு தவம் செய்யப் போய் விட்டார். அப்படிப் போகும் முன், தம் சொத்தினை வளர்ப்பு மகனுக்கு உரிமை யாக்கிச் சென்றார். செட்டியார் பலநாள் திரும்பாமையால், செட்டியாரின் உறவினர் சொத்தினை அபகரித்துக் கொண்ட னர். செட்டியாரின் தங்கை மதுரைச் சொக்கலிங்கப் பெருமானிடம் முறையிட்டனள்.]

## அங்கம் 2

இடம் : மதுரைக் கோவில்.

காலம் : மாலை

நடிகர்கள் : தாய், மகன்.

தனபதியின் தங்கை :—ஆலவாய் அவிர்சடைக் கடவுளே! நான் ஒருத்தி. இந்த ஒருத்திக்கு இவன் ஒருவனே மகன். இவனும் நன்மை தீமை அறியாத பாலகன். என் தமையனார் இவனை வளர்ப்புப் பிள்ளையாக எடுத்து வளர்த்து வந்தார். பிறகு தவம் செய்யக் காட்டிற்குத் தம் மனைவியுடன் சென்றுவிட்டார். செல்லும்போது சொத்துச் சுதந்திரங்களை எங்களுக்கே உரிமையாக்கிவிட்டுச் சென்றார். அவர் திரும்பவில்லை. அவர் மீண்டும் திரும்பிவர மாட்டார் என்று எண்ணங் கொண்ட எம் உறவினர் எங்களுக்குக் கொடுத்த சொத்தினைப் பிடுங்கிக் கொண்டு, எங்களைத் துரத்திவிட்டனர். எங்கும் கண்ணும், எங்கும் காதும் பெற்ற கடவுளே! நீ அறியாதது என்ன இருக்கிறது? என்னையும் என் மகனையும் காப்பாற்றுவாயாக.

[இப்படிக் கூறிக் கீழே விழுந்தாள். சிறிது நேரத்திற்கெல்லாம் உறங்கியும் போனாள். அப்பொழுது அவள் கனவில்]

சிவபெருமான் :—மாதே! வருத்தப்படாதே. நாளை நாமே பாண்டியன் நீதிமன்றத்திற்கு வந்து வழக்கைத் தீர்த்துத் தருகிறோம். நீ உன் உறவினர்களை நீதி மன்றத்திற்கு வருமாறு ஏற்பாடு செய்.

(திடுக்கிட்டு எழுந்து)

நங்கை :—எம் பெருமானே! உன் கருணையே கருணை. "திக்கற்றவர்களுக்குத் தெய்வம் துணை" என்பது என்னைக் குறித்துத்தான் உண்டானதோ? இந்தக் கட்டளைப்படியே செய்கிறேன்.

[தங்கை வீடு சேர்ந்தாள். உறவினர்களிடம் நியாயப்படி நீதி மன்றத்தில் தீர்ப்புப் பெற்றுப் பொருள்களை எடுத்துக் கொள்ளுமாறு கூறினாள்.]

## அங்கம் 3

இடம் :—நீதிமன்றம்.

காலம் :—முன் பகல்.

நடிகர்கள் :—நீதிபதி, தனபதி தங்கை, மகன், தாயத்தார், போலி தனபதி செட்டியார்.



[சிவபெருமான் தனபதி செட்டியார் வேடத்தில் வருகிறார்]

**செட்டியார்:**—(அழுது கொண்டே தன் வளர்ப்புப் பிள்ளையைப் பார்த்து) மகனே! உன் ஐம்படைத்தாலி எங்கே? மார்பில் மதாணி எங்கே? கையில் வளையம் எங்கே? நெற்றியில் சுட்டி எங்கே? இவை எல்லாவற்றையுமா இந்தத் தாயத்தார் கவர்ந்து கொண்டனர்? தங்காய்! வருந்தாதே. (நீதிபதியைப் பார்த்து) ஐயா! நான் என் சொத்தை அதிக வட்டி வாங்கியும், பொருள்களை அநியாய விலைக்கு விற்றும், பிறரை வஞ்சகம் செய்தும், சம்பாதிக்க வில்லையே. தரும வழியில் ஈட்டினேன். என் மனமார என் சொத்துக்களை என் தங்கை மகனுக்கே உரிமையாக்கினேன். நான் திரும்பி வரமாட்டேன் என்று இத்தாயத்தார் இவனிடம் இருந்து கவர்ந்து கொண்டனர். நீங்கள் அவற்றை அவர்களிடமிருந்து வாங்கித்தர வேண்டுகிறேன்.

**நீதிபதி:**—தாயத்தார்களே! நீங்கள் ஏதேனும் சொல்ல வேண்டியிருந்தால் சொல்லலாம்.

**தாயத்தாரில் ஒருவர்:**—ஐயா! முதலாவது இவரைக் குறித்து எங்களுக்குச் சந்தேகம் இருக்கிறது. இவர் உண்மைத் தனபதி செட்டியார் அல்லர்!

**தனபதி செட்டியார்:**—அடா பாவிகளா! நானா போலித் தனபதி செட்டியார்? உன் பாட்டன் பெயர் நடராஜ செட்டியார் அல்லவா? அவருடைய மனைவியார் சிவகாமியம்மா அல்லவா? உனக்கு இரண்டு காணி நிலம் சொந்தமாக இருக்கின்றன என்பது எனக்குத் தெரியாதா?

[இப்படிப் பலருடைய குடும்ப அடையாளங்களைக் கூறி வந்தார். அவற்றைக் கேட்டதும் செட்டிமார்கள் இவர் உண்மைத்

தனபதி செட்டியார் என்று அறிந்து, சொல்லாமலே வீடு போய்ச்சேர்ந்தனர். இதை யுணர்ந்த நீதி வழங்குவோர் சிறு வனுக்குரிய சொத்தினை முறைப்படி அவனுக்குச் சேர வேண்டியது என்று தீர்ப்புக் கூறினர்.]

நீதிபதி :—*அம்மணி! நீ கவலைப்படாதே; வீடு செல். உனக்கும் உன் மகனுக்கும் சொத்துச் சொந்த மானதே. இனித் தாயத்தார் எடுத்துக்கொள்ள மாட்டார்கள். இது அரச ஆணை.*

தங்கை :—*ஐயா! நீர் நீடூழி வாழ்க.*

[செட்டியார் மறைந்தார். நீதிபதி வியந்து, வந்தவர் சிவபெரு மான் என்று உணர்ந்து வணிக மாதினைப் புகழ்ந்தனர்.]

## அருஞ் சொற்கள்

யாக்கை - உடல். நிதி - செல்வம் மகவு - பிள்ளை. ஆல வாய் - மதுரை. அவிர் - ஒளிவிடும். நீதிமன்றம் - நியாயசபை. தாயத்தார் - பங்காளிகள். ஐம்படைத்தாலி - திருமாலின் ஆயுதங் களான சங்கு, சக்கரம், கதை, வாள், வில், ஆகிய இவற்றைப் பொன்னாலோ வெள்ளியாலோ செய்து குழந்தையின் கழுத்தில் காப்புக்காக அணிவது.

## கேள்விகள்

1. தனபதி செட்டியார் ஏன் காட்டிற்குச் சென்றார்?
2. தனபதி செட்டியார் தங்கை ஏன் சிவபெருமானிடம் முறையிட்டாள்?
3. குழந்தைகட்குரிய நகைகள் எவை?

4. தனபதி செட்டியார் செல்வம் எவ்வெம் முறையில் சம்பாதிக்கப்பட்டதன்று ?

5. தனபதி செட்டியாராக வந்த சிவபெருமான் எப்படித் தாம் உண்மைத் தனபதி செட்டியார் என்பதை நிரூபித்துக் காட்டினர் ?

## பயிற்சி

1. இந்த நாடகத்தில் அமைந்த கதையைச் சுருக்கி எழுது.
2. இக்கதை இன்ன நூலில் இருக்கிறது என்பதைக் கூறி அந்நூலாசிரியர் பெயரையும் குறிப்பிடு.
3. ஐம்படைத் தாலியைக் குழந்தைகட்கு அணிவதற்குரிய காரணத்தை அறிவி.
4. குழந்தைகட்குப் பூசுவன, பூண்பன இன்ன எனச் சில வற்றைக் குறிப்பிடு.

## இலக்கணம்

### தமிழ் மொழிச் சொற்களும் பிற மொழிச் சொற்களும்

பேனு, மரம், புஸ்தகம், இவற்றுள் நம் தமிழ் மொழி எது ? பிற மொழிகள் எவை ?

பேனு — ஆங்கிலச் சொல்.
மரம் — தமிழ் மொழி.
புஸ்தகம் — சமஸ்கிருத பாஷை.

இம்மாதிரியாகப் பல மொழிச் சொற்களும் நம் தமிழ் மொழியில் வந்து கலந்திருக்கின்றன. அவற்றை நாம் தள்ளுவதற்கில்லை. அவற்றையும் சேர்த்துக்கொண்டு நாம் இலக்கணம் கூறவேண்டும். தமிழ் மொழிகள் எல்லாம் தமிழ்ச் சொற்கள் ; சமஸ்கிருத மொழிகள் எல்லாம் வட சொற்கள் ; மற்றைய பாஷைகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஆங்கிலம் முதலான மொழிகளில் உள்ள சொற்கள் தமிழில் கலந்து வரும்போது அவை திசைச் சொற்களாம்.

தமிழில் பல சொற்கள் தம் உரு மறைந்து தவருகவே வழங்கப்பட்டு வருகின்றன. தலையணை என்பதைத் தலக்காணி என்கிறோம். கடாரங்காயைக் கெடியாரங்கா என்கிறோம். தவளையைத் தவக்களை என்கிறோம். இப்படிச் சொற்களைத் தவருக எழுதியும் பேசியும் வந்தால் மொழி திருந்துமா? தவறில்லாமல் எழுதப் பேசப் பழகிக் கொள்ளுதலே நலம்.

## பயிற்சி

1. இப்பாடத்திலிருந்து வடமொழி, தென்மொழி, ஆகிய இவற்றிற்கு மும்மூன்று உதாரணங்களை எடுத்துக் காட்டு.
2. பெஞ்சு, பாணி, வெள்ளம்-இவை எந்த மொழிச் சொற்கள். இவற்றிற்கு, இலக்கணத்தில் கொடுக்கப்பட்ட பெயரையும் கூறு.
3. 'திருத்துக'—முழிக்கிறே, ரொம்ப, சேவடன், வயக்கம், அருவாமணை, ஏளையாக, கேக்க, வேணு.

## சொற்களின் பொருளும் பொருள் மாறும் முறையும்

மணம் எனும் சொல் வாசனை என்னும் பொருளையும் கலியாணம் என்னும் பொருளையும் தரும். ஆனல் அவ்விரு பொருளையும் சமயோசிதம் போலக் கொள்ள வேண்டும்.

(உ—ம்) மணம் உள்ளது — வாசனை யுள்ளது.
மணம் முடிந்தது — கலியாணம் முடிந்தது.

இவ்வாருன சொற்கள் பல உள்ளன. செலவு என்னும் சொல், பயணம் என்னும் பொருளும், பொருளைச் செலவிடல் என்னும் பொருளும் உடையது.

(உ—ம்) எனது இலங்கைச் செலவு - பயணம்
இன்றைய செலவு ரூபாய் ஐந்து - செலவிட்ட தொகை

'கடி.' என்னும் உரிச் சொல் காவல், விளக்கம், வாசனை முதலிய பல பொருள்களை யுடையது. அவ்வப்பொருளைச் சமயம் அறிந்து பொருள் கொள்ள வேண்டும்.

கடி மதில் — காவலையுடைய மதில்
கடி மார்பு — விளக்கமான மார்பு
கடி மலர் — வாசனையுடைய மலர்

## பயிற்சி

1. விளைவுகள், பண்ணை அமைத்து, முயல், பரவிய—இச் சொற்களையும், சொற்றொடரையும் பொருள் வேறுபாடு தோன்ற வாக்கியங்களில் வைத்து எழுதிக் காட்டு.
2. இருபொருள் தரும் சொற்கள் மூன்றினை எழுதி, அப்பொருளின் மாறுபாடு தோன்ற வாக்கியத்திலும் எழுதிக் காட்டு.

# 4. ஜப்பானியர்

1. நாம் நம் நாட்டு நடை உடை பாவனைகளைப் பற்றி நன்கு அறிவோம். நம்மைப் போலவே பிறநாட்டு நடை உடை பாவனைகள் இருக்கும் என்று கூற முடியாது. தேசந்தோறும் பாஷை வேறுபடுவது போல, உணவும் பழக்கவழக்கங்களும் வேறுபடுவது இயல்பேயாகும். இந்த முறையில் ஜப்பான் தேசத்தவர்களைப்பற்றி நாம் இங்குச் சிறிது அறிந்து கொள்வோமாக.

2. ஜப்பான் தேசம் சில தீவுகளின் கூட்டமேயாகும். இத்தேசம் ஆசியா கண்டத்தை அடுத்துக் கீழ்த்திசையில் உள்ளது. இத் தேசத்திற்கு இப்பெயர் சீன தேசத்தவர்களால் கொடுக்கப்பட்டது போலும். ஏனெனில் ஜப்பான் என்னும் சொல் சீன மொழிச் சொல் என்று அம்மொழி அறிந்தவர் கூறுகின்றனர். ஜப்பான் என்னும் சொல்லுக்குச் சூரியன் தோன்றும் தேசம் என்பது பொருளாம். ஜப்பான் தேசமும் சீனதேசத்திற்குக் கிழக்கே இருக்கிறது. சூரியன் உதிக்கும் திசையும் கிழக்காதலினால், இவ்வாறு பெயரிட்டனர் என நாம் யூகிக்கலாம்.

3. ஒவ்வொரு தேசத்திற்கும் ஒரு தலைநகரம் உண்டு. நம் இந்தியா தேசத்திற்கு டில்லி தலைநகரம் அல்லவா? அதுபோல ஜப்பான் தேசத்திற்குத் தலைநகரம் டோக்கியோ என்பது. ஜப்பான் தேசத்தில் பல வளைகுடாக்கள் இருக்கின்றன. அதாவது மூன்று புறம் நீரும் ஒருபுறம் நிலமும் கொண்ட பாகமே வளைகுடா எனப்படும். இப்படிப் பல வளைகுடாக்கள் இத்தேசத்தில் இருப்பதனால்தான் கப்பல்கள் வந்து தங்கக்கூடிய துறை

முகங்கள் நல்ல முறையில் அமைந்திருக்கின்றன. கட லுக்குப் பக்கத்தே மலைகளும் உண்டு. அம்மலைகள் இருப்பதால், அத்தேசத்தின் தட்ப வெப்ப நிலைமை எக் காலத்தும் ஒரு தன்மையாக இருக்கிறது. ஆனால், மழை காலத்தில் மட்டும் சிறிது குளிர் அதிகமாக இருக்கும். ஜப்பான் தேசத்தில் எருமைகளைக் காண்பது அரிது; மற்றைப்படி வேறு பல விலங்குகளைக் காணலாம். அங்கு வாழும் மக்கள் மலைப் பிரதேசங்களில் தானியப்பயிர் களையும், தேயிலை, புகையிலை, பருத்தி முதலியவற்றை யும் சாகுபடி செய்கின்றனர். இத்தேசத்தில் மண்ணெண் ணெய் ஊற்றுக்கள் உண்டு. சில இடங்களில் நிலக்கரிச் சுரங்கங்களும் உண்டு.



4. ஜப்பானியர் மஞ்சள் நிறமுடையவர்கள்; மிக வும் குட்டையானவர்கள்; அவர்களுக்கு உயரமான

நாடை எலும்பும், சப்பை மூக்கும், சரிந்த கண்களும் உண்டு. ஜப்பான் தேசத்து ஆடவர் முடியை நன்கு கத்த ரித்து அழகு படுத்திக்கொள்வர். பெண்கள் தங்கள் கூந் தலை நன்கு வளர்த்துத் தொடைவரையில் தொங்க விட் டுக் கொள்வர். சடைபோட்டுப் பின்னிக்கொள்வர். ஆனல், அவர்கள் காதையும், மூக்கையும் துளைசெய்து கொள்ளமாட்டார்கள். அதனுல் அவர்கட்கு ஆபரணம் அதிகம் தேவை இல்லை என்பது தெரிகிறது அல்லவா? இப்படி அவர்கள் அணிகலன்களை அணிந்து கொள்ளா மையால் செல்வப்பெண்கள் இவர்கள், ஏழைப்பெண்கள் இவர்கள் என்றும் அறிந்து கொள்ள முடியாது. ஆபர ணங்களில் அதிகப் பணம் செலவிடுவது அறியாமை என்பது அவர்களுடைய கொள்கை போலும்.

5. ஜப்பானியர் இடைவிடா முயற்சி யுடையவர் கள். ஏட்டுக்கல்வி தொழிற்கல்வி இரண்டையும் அவர் கள் சரிசமமாக எண்ணி அவற்றில் தேர்ச்சி யடைந்த வர்கள். அவர்கட்குப் பட்டுநூல் நெசவு, பருத்தி நூல் நெசவு இரண்டும் தெரியும். அவர்கள் பெரியோர்களுக் குக் கீழ்ப்படிந்து நடப்பர். ராஜபக்தி, கடவுள் பக்தி இரண்டும் அவர்களிடம் உண்டு. அவர்கள் பெரும் பாலும் புத்த மதத்தைச் சேர்ந்தவர்கள். ஏற்பது இகழ்ச்சி என்னும் கொள்கை அவர்களிடத்தில் வேரூன்றியுள் ளது. அவர்கள் மொழி ஜப்பானி மொழி யாகும்.

6. ஜப்பானியர் நீண்ட அங்கியை அணிவர். அவ் வங்கி கழுத்திலிருந்து கால்வரைத் தொங்கும். அதற்குப் பொத்தான்கூட இருக்காது. அதனை அவர்கள் கிமோனே என்று அழைக்கின்றனர். இடுப்பில் கச்சையைக் கட்டிக் கொள்வர். கிமோனே பருத்தியினுலும், கம்பளியினுலும்

செய்யப்பட்டிருக்கும். பருத்திக் கிமோனேவை வெயிற் காலங்களிலும், கம்பளிக் கிமோனேவைக் குளிர் காலங்களிலும் தரித்துக்கொள்வர்.

7. ஜப்பானியர்கட்குரிய உணவுப் பொருள்கள் நெல்லரிசி, வாற்கோதுமை, கோதுமை, மரக்கறி வகைகள், மீன் வகைகள் முதலியன. அவர்கள் தேத் தண்ணீர் குடிப்பதிலும் ஒரு விந்தை உண்டு. நம்மைப் போலப் பாலும் சர்க்கரையும் சேர்த்துப் பருகமாட்டார்கள். ஆவின்பாலை அதனுடன் சேர்ப்பதால் மாட்டின் மந்தகுணம் வந்து விடுமாம். ஆகவே, எந்தக் காரணங் கொண்டுங் குழந்தைக்குக் கூடத் தாய்ப்பாலைத் தவிர்த்து மாட்டுப்பாலைக் கொடுக்கவே மாட்டார்கள். ஆனால், இப்பொழுது நவநாகரிகம் தோன்றிக்கொண்டு வருவதால் இந்தக் கண்டிப்பான முறையைக் கைவிட்டு மாட்டுப்பாலையும் சேர்த்துக்கொள்ளத் தொடங்கினர்.

8. ஜப்பானியர் உறைவிடமான வீடுகள் பெரும் பெரும் கட்டடங்கள் அல்ல. சிறுசிறு வீடுகளே ஆகும். இரண்டடுக்கு மூன்றடுக்கு வீடுகளை நாம் காணமுடியாது. அச்சிறு வீடுகளையும் நாம் கட்டிக்கொள்வது போலச் சுண்ணும்பினுலும் செங்கற்களாலும் கட்டிக் கொள்ளமாட்டார்கள். மெழுகு சம்பந்தமான காகிதங்களாலேயே அவர்கள் வீடு கட்டப்பட்டிருக்கும். மேல் கூரை, கூரையைத் தாங்கி நிற்கும் தூண்கள் ஆகிய இவற்றைத் தவிர்த்து, ஏனையவை காகிதத்தாலேயே கட்டப்பட்டிருக்கும். ஏன் இப்படி வீட்டைக் கட்டிக் கொள்கின்றனர் என்று நீங்கள் நினைக்கலாம். ஜப்பான் தேசத்தில் பூகம்பம் அடிக்கடி உண்டாகும். அதோடு எரிமலைகளின் தொந்தரவும் அங்குண்டு. இவ்விரண்டின்

காரணங்களால் வீடுகள் நாசமுறும். இந்நாசத்திலிருந்து தப்பித்துக்கொள்ளவே வீடுகளைக் காகிதங்களால் அமைத்துக் கொள்கின்றனர். ஜப்பானியர் தம்மிடத்தில் ஏதேனும் அருமையான பொருள்கள் இருந்தால், அவற்றைப் பூமிக்குள் பள்ளம் தோண்டி அங்குப் புதைத்து வைப்பர்.

9. வீட்டை அலங்காரமாக வைத்துக் கொள்வதில் அவர்கட்குப் பிரியம் அதிகம். வர்ணக்காகிதங்களால் செய்யப்பட்ட பூக்களாலும், விளையாட்டுச் சாமான்களாலும் வீட்டை அலங்கரிப்பர். வர்ணக் காகிதங்களால் செய்யப்பட்ட விளக்குக் கூடுகளில் மெழுகு வர்த்திகளை எரியவிடுவர். வீட்டில் விலையுயர்ந்த சாமான்களை வைத்துக் கொள்ளமாட்டார்கள். உட்கார ஓலைப் பாய்களை உபயோகப்படுத்துவர்

10. ஜப்பானியர்களிடம் பல நற்குணங்கள் உண்டு. அவற்றுள் சிலவற்றை முன்பே கூறியுள்ளோம். அவர்களிடம் இன்சொல் காணப்படுமே அன்றி வன்சொல் காணப்படாது.

11. "இனிய உளவாக இன்னாத கூறல் கனி யிருப்பக் காய்கவர்ந் தற்று" என்பது அவர்களுடைய கொள்கை போலும்! இத்தகைய மக்களின் நடையுடை பாவனைகளை அறிவதால் நாம் பல செய்திகளை அறிந்து கொள்கிறோம் அல்லவா? ஆகவே, மாணவர்களே! பிறநாட்டு மக்களைப் பற்றியும் அறிந்து, அவர்கள் நாகரிகத்தில் நாம் கொள்ள வேண்டுவனவற்றைக் கொண்டு, தள்ள வேண்டுவனவற்றைத் தள்ளி விட வேண்டும்.

## அருஞ் சொற்கள்

பாவனை - நடிப்பு. தட்பம் - குளிர்ச்சி. வெப்பம் - உஷ்ணம். அணிகலன்கள் - ஆபரணங்கள். ஏற்பது - பிறரிடம் சென்று ஒரு பொருளை வாங்குவது. ஆ - பசு. நவ நவ - புதிய புதிய. உறைவிடம் - வாழிடம். பூகம்பம் - பூமியின் அதிர்ச்சி. இன்னாத சொற்கள் - தீய சொற்கள். கவர்ந்தற்று - எடுத்துக்கொண்டதற்குச் சமம்.

## கேள்விகள்

1. ஜப்பான் தேசம் எங்கு இருக்கிறது?
2. அவர்கள் வாழும் வீட்டை எம்முறையில் அமைக்கின்றனர்? ஏன்?
3. அவர்களிடம் காணப்படும் குணங்கள் எவை?
4. ஜப்பானியர் தோற்றத்தில் எவ்வாறு காணப்படுவர்?
5. அவர்கள் வீட்டை எங்ஙனம் அலங்காரம் செய்வர்?

## பயிற்சி

1. ஜப்பானியர் நாடு அமைந்துள்ள இயற்கை அமைப்பைப் புலப்படுத்துக.
2. அவர்கள் உடையைப் பற்றியும் உணவைப் பற்றியும் சிறு குறிப்புத் தருக.
3. ஜப்பானியப் பெண்கள் அலங்காரத்தைப் பற்றி உனக்குத் தெரிந்ததைப் புலப்படுத்துக.
4. ஜப்பானி, கிமோனோ, டோக்கியோ—சிறு குறிப்புத் தருக.

# இலக்கணம்

## பெயர்ச்சொல்லும், வினைச்சொல்லும்

பலகை, புத்தகம், இவை எவற்றைக் குறிக்கின்றன? ஒரு பொருளைக் குறிக்கின்றன அல்லவா? ஆகவே, ஒரு பொருளின் பெயரைக் குறிப்பது பெயர்ச்சொல்லாம்.

பலகை — ஒரு பொருளின் பெயர்.

சென்னை — ஓர் இடத்தின் பெயர்.

வைகாசி — ஒரு காலத்தின் பெயர்.

கை — ஓர் உறுப்பின் பெயர்.

நன்மை — ஒரு குணத்தின் பெயர்.

செய்தல் — ஒரு தொழிலின் பெயர்.

ஆகவே, பெயர்கள் எத்தனை வகைப்படுகின்றன? பொருட்பெயர், இடப்பெயர், காலப்பெயர், சினைப்பெயர், குணப்பெயர், தொழிற்பெயர் என ஆறு வகைப்படுகின்றன அல்லவா?

ஒன்று இரண்டு முதலிய எண்ணுப் பெயர்களும், பெயர்ச்சொற்களாம். அவை எண்ணுப்பெயர் எனப்படும். அவையே முதலாவது இரண்டாவது என்று வந்தால், எண்ணுப்பெயர் என்ற பெயர் பெறுமல், பெயர் அடைமொழியாக அமைந்து அடைமொழிச் சொல்லாகிவிடும்.

முருகன் நடந்தான்; கமலம் படித்தாள். இங்கு நடந்தான், படித்தாள் என்னும் சொற்கள் எதைக் காட்டுகின்றன? முருகன் செய்த தொழிலையும், கமலம் புரிந்த செயலையும் காட்டுகின்றன அன்றோ? ஆகவே, பெயர்ச்சொற்களின் தொழிலை, அதாவது செயலைக் காட்டுவது வினைச்சொல்லாம்.

## பெயர் அடையும் வினையடையும்

நல்ல பையன் என்னும் தொடரில் நல்ல என்பது பையன் என்னும் பெயர்ச் சொல்லின் அடைமொழியாகும். இதனைப் பெயர் அடை என்னலாம். மெல்லப் பேசினான். இதில் மெல்ல என்பது வினையடை. ஆகவே, இது வினையடையாம்.

1. செம்புத்தகடு, ஓலை, எகிப்து, சீனா, துவக்கம், குடிசை, வருடம், இறக்குமதி, ஜில்லா, வன்மை இவை என்ன பெயர்கள்?
2. இப்பாடத்திலிருந்து ஐந்து பெயர்ச்சொற்களையும் வினைச் சொற்களையும் எடுத்துக்காட்டு.
3. அருமை மாணவர்களே! ஏழைப்பெண்கள், வாற் கோதுமை, சன்னமான கோரைப்புல், மெல்லிய துணி, நல்லதுணி, முதலாவதுவீடு, மெல்ல எடு, வேகமாக நட —இவற்றுள் அடைமொழிச் சொற்களாக வந்துள்ள மொழிகள் எவை? அவற்றுள் பெயருக்கு அடையாக இருக்கின்றவையும், வினைக்கு அடையாக இருக்கின்ற வையும் எவை?

# 5. புது நாடுகண்ட புண்ணியர்

*1. புதுமை காண்பதில் மேற்கு நாட்டவர் முனைந்து நிற்பர். அதன்பொருட்டுத் தம் உடல், பொருள், ஆவி மூன்றையும் தத்தம் செய்ய முன் நிற்பர். அப்படி முன்னின்ற பலருள்* டேவிட் லிவிங்ஸ்டன் *என்பவரும் ஒருவர்.*

*2. டேவிட் லிவிங்ஸ்டன்* ஸ்காட்லண்டு *நாட்டு வாலிபர். அந்நாட்டைச் சார்ந்த* கிளாஸ்கோவுக்கு *அருகில்*

உள்ள சிற்றூரில் ஏழைக்குடியில் தோன்றியவர். அல்லி வயிற்றல் அகில் பிறப்பது இயல்புதானே? அதுபோல ஏழைக் குடியின் பெரிய வீர புருஷர் தோன்றியதில் வியப்பில்லை. இவர் கி. பி. 1813-ஆம் ஆண்டு மார்ச் மாதம் 19-ஆம் தேதி பிறந்தார். ஏழைக் குடியில் பிறந்த லிவிங்ஸ்டனுக்கு மேற்படிப்புப் படிக்க வசதி ஏற்படவில்லை. தம் பத்தாவது வயதிலேயே வேலை செய்து பிழைக்க வேண்டியவராகி விட்டார். முதல் முதல் இவர் வேலையில் அமர்ந்த இடம் ஒரு பஞ்சாலையாகும். இவர் காலை ஆறுமணி முதல் இரவு ஒன்பது மணிவரை வேலை செய்தார். அப்படி வேலை செய்தும் இவருக்குக் கிடைத்த ஊதியம் மிகக் குறைவு. அந்தச் சிறு தொகையிலும் மிச்சம் பிடித்துப் புத்தகங்களை வாங்கிப் படித்து வந்தார். இரவுப் பள்ளிதான் இவர் கலாசாலை; நேரங்களை வீணாக்கமாட்டார்; ஓயாமல் படிப்பார். இப்படிப் படித்தவை பிரயாண நூல்களும், சில விஞ்ஞான நூல்களுமாகும். இவ்வாறு படித்த படிப்புப் பயன் தராமல் இல்லை. தமது பத்தொன்பதாம் வயதில் கிளாஸ்கோ பல்கலைக் கழகத்தில் சேர்ந்து டாக்டர் பட்டம் பெற்றார் என்றால், இவர் உழைப்பையும், உணர்ச்சியையும் என்னென்று வியப்பது?

3. சமயத் தொண்டு செய்வதிலும் இவருக்குப் பெரு விருப்பம் உண்டு. அதன்பொருட்டுப்பல சமய நூல்களைக் கற்றறிந்தார். லண்டன் மிஷன் கழகத்தில் சேர்ந்து கிறிஸ்தவச் சமயப் பிரசாரத்தின் பொருட்டு 1840-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 8-ஆம் நாள் ஆப்பிரிக்காவுக்குச் சென்றார். மூன்று மாதம் இவர் பயணப்பட்டு அக் கண்டத்தின் தென் பகுதியில் இருக்கும் கேப் டவுனை

அடைந்தார். பின் நேட்டால் துறைமுகத்தை அடைந்தார். அங்கிருந்து மாட்டு வண்டியில் ஏறி 100 மைல் பிர யாணம் செய்து, 1841-இல் 'மே' திங்களில் 31-ஆம் நாள் குருமன் என்னும் இடத்தைச் சார்ந்தார்.

4. குருமன் என்னும் இடம் பெரிதும் நீக்ரோக் கள் வாழும் இடம். அவர்களைச் சீர்த்திருத்திச் சமய அறிவு புகட்ட எண்ணினார். அதன்பொருட்டு அவர் கள் மொழியை விரைவில் பயின்றார். அம்மொழியைக் கற்றுக் கொண்டதும், அம்மொழியைக் கொண்டே அவர்கட்குக் கிறிஸ்தவ மதக்கொள்கைகளைப் புகட்டி னார்; கல்வி அறிவை யூட்டினார். இதனால் மகிழ்வுற்ற நீக்ரோவர்கள் இவரிடம் பேரன்பும், பேராதரவும் காட்டினர்.

5. லிவிங்ஸ்டன் வேலையின்றி ஓர் இடத்தில் இருப் பவர் அல்லர். இவர் சஞ்சாரம் செய்வதே இயல்பாகக் கொண்டவர். 1843-ஆம் ஆண்டு மாபத்ஸா என்னும் இடத்தை யடைந்தார். அவ்விடம் இயற்கை எழில் மிக்கு இருப்பதை அறிந்தார். அவ்வழகு இவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. அவ்விடம் ஒரு பள்ளத்தாக்கு. அந்த இடத்தில் ஓர் இல்லம் அமைத்துக்கொண்டார். அங்கு மூன்று ஆண்டுகள் தங்கியிருந்தார். அப்பொழுது இவருக்கு ஒரு விபத்து நேர்ந்தது. அதாவது ஒரு சிங்கத் தோடு போராடினார். அச்சிங்கம் இவரது வலத்தோளைக் கடித்து விட்டது. இவர் தப்பியதே தம்பிரான் புண்ணிய மாயிற்று. நல்லவேளையாக இவருடன் இருந்தவர் அதனைச் சுட்டுக்கொன்றார். இவர் தோள்புண் ஆறு வதற்குப் பல நாட்கள் சென்றன.

6. இவருக்கு டாக்டர் மோவியத் என்பவரின் நட்பு குருமான் என்னும் இடத்தில் கிடைத்தது. அதனால் அவருடைய மகள் மேரி என்னும் பெயருடையாளை மணம் புரியவும் சந்தர்ப்பம் கிடைத்தது. இவருக்குப் பிறர் கண்டறியாத இடங்களை எல்லாம் தம்மால் கண்டறியப் படவேண்டுமென்னும் ஆசை இருந்தது. அதனால் கலஹாரி பாலைவனத்தைக்கடந்து 300 கல் சென்றார். பாலைவனம் என்றால் நீர் அற்ற இடம் அல்லவா? இவருக்கு இருந்த வாகனம் மாட்டு வண்டிதானே! மாடுகள் நீரின்றி வருந்தின என்றாலும், தாம் எடுத்த காரியத்தை இடைவிடாமல் முடிக்கும் பொருட்டுத் தொடர்ந்து சென்று நிகாமி என்னும் ஏரியைக் கண்டார். அதனை முதல் முதல் கண்டறிந்து கூறியவர் இவரே. அவ்வேரியையும் கடந்து மேலே செல்லவேண்டும் என்பது இவர் அவா. ஆனால், நீரைக் கடத்தற்குத் தோணி வசதி இல்லாமையால் வந்தவழியே மீண்டார். இவர் வருவதற்குள் மாபத்ஸா பஞ்சத்தால் வருந்தியதால் அவ்வூரார் அவ்வூரை விட்டு ஓடிவிட்டனர். மேரியம்மையும் இவர் மக்களும், பசியால் வாடி வதங்கினர். இதனைக் கண்டு வருந்திய டேவிட் லிவிங்ஸ்டன் அவர்களை அழைத்துக் கொண்டு மாமனார் இல்லமாகிய குருமன் என்ற ஊரை யடைந்தார். அங்கு ஓர் ஆண்டு இருந்துவிட்டுத் தம் மனைவி மக்களுடன் வடக்கு நோக்கிப் பயணப்படுகையில், வழிதப்பி ஒரு பாலையை அடைந்தார். அப்பொழுது இவர் பட்ட அல்லல் பலவாகும். உண்ண உணவு இல்லை; குடிக்க நீர் இல்லை, தாம் பொறுத்துக்கொண்டாலும் குழந்தைகள் எப்படிப் பொறுத்துக்கொள்ள இயலும்? நல்ல வேளையாக அருகில் இருந்த ஊரில் உள்ளவர்கள் நீரும் உணவும் கொடுத்து உதவினார்கள்.

7. அங்கு இவர் ஒருவாறு சிறிது ஓய்வுகொண்டு, மேலும் வடகிழக்காக 130 கல் தூரம் சென்று ஜாம்பஸி



நதியைக் கண்டனர். மேலும் பல இடங்களைக் காண எண்ணமுடைய இவர், தம்மனைவிமக்கள் கூட இருப்பின் பெருந்தடையாகும் என்று எண்ணி, அவர்களை இங்கி

லாந்துக்கு அனுப்பிவிட்டார். ஜாம்பஸி நதியைக் கண்டவர் மேலும் மேலும் சென்று அந்நதி கடலுடன் கலக்கும் இடத்தையும் கண்டு இன்புற்றார். அதன் பின் 1855-ஆம் ஆண்டு அந்நதியின் தொடர்புபெற்ற ஒரு நீர்வீழ்ச்சியைக் கண்டார். அது 320 அடி உயரத்தில் இருந்து கீழே விழுவது. அதற்கு **விக்டோரியா நீர் வீழ்ச்சி** என்று பெயரிட்டவர் இவரே; அதனை முதல் முதல் கண்டவரும் இவரே.

8. இவர் இவ்வாறு பல சிறிய இடங்களைக் கண்டு 1864 - இல் இங்கிலாந்தை அடைந்தார். விக்டோரியா நீர்வீழ்ச்சியைக் கண்டவரையில் இவர் பயணஞ்செய்த ஆண்டுகள் பதினாறு ஆகும். இவருடைய வரவு கண்ட இங்கிலாந்து மக்கள், சூரியனைக் கண்ட தாமரை போல் மனமகிழ்ந்து வரவேற்றனர். இவருடைய மன எழுச்சியையும் ஊக்க உணர்ச்சியையும் சிறப்பித்துப் பாராட்டினார். உலக அமைப்பு முதலியவற்றை ஆராயும் சங்கமாகிய ராயல் பூகோள சங்கத்தார் இவரது முயற்சியைப் பாராட்டி இவருக்கு விக்டோரியா தங்கப்பதக்கம் ஈந்து பெருமைப் படுத்தினர்.

9. இத்தகைய வீர புருஷரை நாம் பாராட்டாமல் இருக்கமுடியாது. இவரைப்போல உங்களில் பலரும் புது இடங்காண ஈடுபடவும் நேரலாம். இன்னது நடக்கும் என்பது யாருக்குத் தெரியும்!

## அருஞ் சொற்கள்

முனைந்து - முன்வந்து. ஆவி - உயிர். ஊதியம் - வருவாய். எழில்-அழகு. தம்பிரான் - கடவுள். அவா - ஆசை. தோணி - படகு. ஆண்டு - வருடம். அல்லல் - துயர்.

## கேள்விகள்

1. லிவிங்ஸ்டன் எங்கு எப்பொழுது பிறந்தார் ?
2. இவர் எப்படித் தம் கல்வி அறிவைப் பெருக்கிக்கொண் டார் ?
3. இவர் வெளிநாடு செல்ல எப்படி வசதி ஏற்பட்டது ?
4. இவர் யாரை மணந்தார் ?

## பயிற்சி

1. நீக்ரோக்கள் ஆதரவை இவர் எங்ஙனம் பெற்ருர் என்பதைக் குறிப்பிடு.
2. இவர் யாரால் எங்ஙனம் பாராட்டப்பட்டார் என்பதை விவரி.
3. இவரைப்போலப் புது இடங்கண்ட ஒருவர் பெயரைக் குறிப்பிடு.

## இலக்கணம்

### புணர்ச்சி

வேல் + அழகு என்னும் தொடரைச் சேர்த்தால், வேலழகு என்று அல்லவா புணரும். வேல் என்னும் சொல்லில் ஈற்றில் இருக்கும் எழுத்து மெய் எழுத்து ; அழகு என்னும் சொல்லின் முதலில் நிற்கும் எழுத்து உயிர் எழுத்து. இவ்வாறு மெய்யும் உயிரும் பெரும்பாலும் இணைந்தே வரும்.

பல் + அழகு இத்தொடரைச் சேர்த்துக் காட்டுங்கள். இத் தொடர் சேரும்போது பல்லழகு என்று சேரும். அப்படிச் சேரும்போது ‘ல்’ என்னும் மற்ருெரு மெய் இடையே தோன்று கிறது. இதனுல் தனிக் குறிலோடு எந்த மெய் எழுத்து இருந் தாலும், அதனேடு உயிர் எழுத்து முதலாகக் கொண்ட மொழி

புணரும்போது இடையில் மெய் இரட்டிக்கும் என்பதை அறியலாம்.

வண்டி + மாடு என்னும் தொடரை ஒன்று சேர்த்தால் எவ்வாறு புணரும்? வண்டிமாடு என்றுதான் புணரும். நாட்டை + சார்ந்த என்னும் தொடர், புணர்கையில் நாட்டைச் சார்ந்த என்று புணரும். ஆகவே, மாறுதலின்றிப் புணர்ந்த முன்னைய புணர்ச்சியை இயல்புப் புணர்ச்சி என்றும், மாறுதலுடன் புணர்ந்த பின்னைய புணர்ச்சியை விகாரப் புணர்ச்சி என்றும் கூறுவர்.

## பயிற்சி

1. புதுமை காண்பதில், முன்னிறை, அந்நாட்டை, நாட்டைச் சார்ந்த, அதுபோல, ஏழைக் குடியில், படிக்க வசதி, பஞ்சாலை, ஆறுமணி, மிகக்குறைவு - இவற்றுள் இன்னவை இயல்பு புணர்ச்சி, இன்னவை விகாரப் புணர்ச்சி எனக் காட்டு.
2. நீரின்றி, மக்களுடன், பெயரிட்டனர், கல்லடி, நல்லெண்ணம், நொய்யரிசி, நள்ளிரவு — இவற்றைப் பிரித்து, புணர்ந்திருந்தமைக்கு விதியையும் கூறு.

# 6. இசைமாண்பு

*1. தமிழ்மொழி முத்திறத்ததாகக் கூறப்படுகிறது. முத்திறமாவன: இயல், இசை, நாடகம் என்பன. இவற்றுள் நடுநாயகமாக விளங்குவது இசைத்தமிழ். இசைத் தமிழின் பெருமை யறிந்தே அதை நடுவில் வைத்துப் போற்றினர் போலும்! இயல் தமிழுக்கும் நாடகத் தமிழுக்கும் இது துணைசெய்வதால் நடுநிலை*

தந்தனர் போலும்! இழுக்குடைப் பாட்டிற்கெல்லாம் இசை நன்று அல்லவா?

2. இசை எவரையும் தம் வயமாக்கவல்லது. மனத்தை ஒருவழிப்படுத்த வல்லது. இறைவரையும் இசைதான் வசப்படுத்துவது. ஒரு நிகழ்ச்சியிலிருந்து இந்த உண்மை நமக்கு நன்கு புலனுகும். சேரமான் பெருமாள் நாயனுர் என்பவர் சேரநாட்டு மன்னர். அரச ராஞலும் ஆண்டவன் பக்தியில் ஈடுபாடு மிகுதியும் உடையவர். அவர் தினமும் நடராசப் பெருமானைப் பூசித்து வழிபடுவது வழக்கம். அந்தப் பூசை முடிந்ததும், பூசையை ஏற்றுக் கொண்டதற்கு அறிகுறியாகச் சிலம்பு ஓசை காட்டுவது சபாநாயகருடைய வேலையாகவும் இருந்தது. இப்படிச் சிலநாள் நிகழ்ந்து வந்தது.

3. ஒருமுறை சுந்தரமூர்த்தி சுவாமிகள் நடராசப் பெருமானை வணங்கித் தேவாரப் பண்ணைப் பாடிக் கொண்டிருந்தார். அதே சமயத்தில் சேரமான் பெருமாள் நாயனுரும் வழக்கப்படி செய்யும் பூசையை முடித்துச் சிலம்போசை கேட்கக் காத்துக்கொண்டிருந்தார். நீண்ட நேரம் ஆகியும் சிலம்போசை கேட்கப்படவில்லை; சேரர் பெருமானுக்கு 'இன்று தம் பூசையில் ஏதோ தவறு போலும். அதனுல்தான் நம் பூசையை ஏற்றுக்கொண்டதாகத் தெரிவிக்கவில்லை' என்று தம் உடைவாள் கொண்டு தம்மை மாய்த்துக் கொள்ள முயன்ருர். உடனே சிலம்போசை முன்னிலும் பலமாக எழும்பியது. அதோடு ஆகாயவாணியாக 'அன்பனே! உன் பூசையில் யாதொரு தவறும் இல்லை: அன்பன் சுந்தரன் நம்முன் தேவார இசையைப் பாடிக்கொண்டிருந்தான். அதில்

மயங்கி இருந்ததால் நீ பூசையை முடித்ததையும் கவனித்திலேன். சிலம்போசை எழுப்பவேண்டுமென எண்ணமும் கொண்டிலேன்' என இவ்வாறு சில சொற்கள் எழுந்தன.

4. இக்கதையில் இருந்து என்ன அறிகிறீர்கள்? எவரையும் இசை மயக்கவல்லது என்பதை அறிகிறீர்கள் அல்லவா? பகைவர்களையும் இது நண்பராக்கும் வன்மை படைத்தது. பாலைவனத்தில் வாழ்பவர் வழிப்பறிக் கொள்ளைக்காரர்கள். அவ்வழியே யாரேனும் தப்பித் தவறி வந்துவிட்டால், அவர்களை அடித்து அவர்களிடம் இருந்து பொருள்களைப் பறித்துக் கொள்வர். பொருள் இல்லை என்றாலும் அவர்களைக் கொன்று உடலம் துள்ளுவதைக் கண்டாகிலும் ஆனந்தம் அடைவர். என்னே அவர்கள் கொடுமை! அப்படிப் பட்டவர்களிடம் இருந்தும் இசைவாணர் உயிர்தப்பி வருவார்கள் என்றால், இசைக்குள்ள பெருமையே பெருமையன்றோ! இத்தகைய கொலைஞர் முன்பாகப் பாலைப் பண்ணைப் பாடுவார்கள் அவ்விசைவாணர். அப் பாட்டைக் கேட்டு வில்லும் அம்பும் தங்கள் மீதிருந்து நழுவிப் போவதையும் கவனிக்காமல் மயங்கிப்போவர் கொள்ளைக்காரர்.

5. படம் எடுத்து ஆடும் பாம்புகளும் இசைக்குக் கட்டுப்படும். உடற்பருமன் வாய்ந்த யானைகளும் இசையைக் கேட்டு அடங்கிவிடும். இதற்குரிய ஒரு நிகழ்ச்சியைப் பாருங்கள். குறிஞ்சி நிலம் என்பது மலையும் மலையைச் சார்ந்த இடம். இவ்விடத்தில் வாழ்பவர் தினையரிசியை விதைத்து அறுவடை செய்து வாழ்வர். தினை முதிர்ந்தபோது மலை நாட்டு மக்கள் தம்

இளம் பெண்களைக் காவல் வைப்பது வழக்கம். அவ்வழக்கப்படி ஒரு குறிஞ்சி நில மாது தினைப்புனத்தைக் காத்து வந்தாள். அவளுக்குச் சுனையில் நீராட விருப்பம் எழுந்தது. அங்ஙனமே மலைச்சுனையில் நீராடினாள். நீராடிய பிறகு தன் நீண்ட அடர்ந்த கூந்தல் ஈரம்



புலராது இருந்தமையால், அதனைத் தன் கைவிரல்களால் கோதி உலர்த்திக் கொண்டிருந்தாள். அப்படி உலர்த்தும்போது சும்மா உலர்த்தாமல் குறிஞ்சிப் பண்ணைப் பாடிக் கொண்டே உலர்த்திக் கொண்டிருந்தாள்.

6. இந்தச் சமயத்தில் ஒரு பெரிய யானை தனக்குப் பசி ஏற்பட்டதனால், தினைப்புனத்தை அடைந்து, நன்கு முதிர்ந்துள்ள தினைக்கதிரை உண்ணப் புறப்பட்டது.

புறப்படும்போதே அவ்வேடர்குலப் பெண் பாடுவதைச் செவியுற்றது. அவ்வளவுதான், தான் நினைக்கதிரை உண்ணவந்த எண்ணத்தை மறந்தது. அப்படியே இசையில் இலயித்து நின்றுவிட்டது. செவிக்கு உணவு இல்லாதபோது சிறிது வயிற்றுக்கும் ஈயப்படும் என்று வள்ளுவரின் திருக்குறள் பொருளை உறுதியாக்கி விட்டது. பசி வந்திடப் பத்தும் பறக்கும் என்பர். ஆனால் இசைக்குப் பசியும் கட்டுப்பட வேண்டி இருக்கிறது.

7. ஆகவே, அருமை மாணவர்களே! நீங்களும் இசையில் நன்கு பழகுங்கள். தெய்வங்களும் பூமாலையை விடப் பாமாலையைத்தான் மிகுதியும் விரும்பும். இசைப் பயிற்சியும் உங்கள் பயிற்சியில் ஒன்றாக இருப்பதாக.

## அருஞ் சொற்கள்

சபா நாயகர் - நடராசப் பெருமான், பண் - பாட்டு. ஆகாய வாணி – அசரீரி. பாலைப்பண் - பாலை நிலத்திற்குரிய இசை. குறிஞ்சிப்பண் - குறிஞ்சி நிலத்திற்குரிய இசை.

## கேள்விகள்

1. முத்திறத் தமிழ் எவை?
2. இசை, தெய்வங்களையும் மயக்கவல்லது என்பது எவ்வாறு தெரிகிறது?
3. பாலைநில மக்கள் இயல்பு யாது?
4. அவர்களிடம் இருந்து பாணர் எங்ஙனம் உயிர் தப்புவர்?
5. விலங்குகளும் இசைக்கு அடங்கிவிடும் என்பதை நாம் எவ்வாறு உணர்கிறோம்?

## பயிற்சி

1. நான்கு சைவ சமயாசிரியர்களைக் குறிப்பிடு.
2. "பசிவந்திடப் பத்தும் பறக்கும்" என்னும் அடியால் குறிக்கப்பட்ட பத்தினையும் எடுத்துக் காட்டு.
3. சுந்தரர் வரலாறு, சேரமான் பெருமாள் நாயனர் வரலாறு கூறும் நூலைக் குறிப்பிடு.
4. பாமாலையாக உள்ள ஒரு நூலைக் குறிப்பிடு.

## இலக்கணம்

### நிறுத்தக் குறிகள்

ஒரு வாக்கியம் முடிந்து விட்டது, முடியவில்லை என்பதை அவ்வாக்கியத்தின் ஈற்றில் இடப்படும் குறிகளைக் கொண்டுதான் உணரமுடியும். அப்படி இடக் கூடிய குறிகள் கீழ்வருவன.

. இது முற்றுப் புள்ளி

? இது கேள்விக் குறி

! இது உணர்ச்சிக் குறி

வாக்கியம் முடிந்த இடத்தில் முற்றுப்புள்ளியை இட வேண்டும்.

(உ-ம்) அவன் போனான்.

கேள்வி கேட்கும்போது அவ்வாக்கியத்தின் ஈற்றில் கேள்விக் குறியை இடவேண்டும்.

(உ-ம்) அவன் போனானா ?

ஆச்சரியம், பரிதாபம் முதலிய உணர்ச்சிகளை வெளிப் படுத்தும்போது உணர்ச்சிக் குறியை அமைக்க வேண்டும்.

(உ-ம்) ஆ ! இம்மலரின் அழகே அழகு !
ஐயோ ! கீழே விழுந்து விட்டாரே !

# 41

1. கீழ்வரும் வாக்கியங்களுக்குத் தகுந்த குறிகளை அமைக்க.

   1. இசைப்பயிற்சி யுண்டா
   2. சீச்சீ இது வேண்டா
   3. நான் படிக்கிறேன்
   4. ஏன் வரவில்லை
   5. ஆஹா நீங்களே வந்து விட்டீரோ
   6. கந்தன் வருகிறான்

2. இப்பாடத்திலிருந்து கேள்விக்குறி, முற்றுப்புள்ளிக் குறி, ஆச்சரியக் குறி அமைந்த வாக்கியங்களை எடுத்துக் காட்டு.



# I. வாழ்த்து

## திருவருட்பா

*கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பே!*
*காணார்க்கும் கண்டவர்க்கும் கண்ணளிக்கும் கணணே!*
*வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே!*
*மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கும் மதியே!*
*நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே!*
*நரர்களுக்கும் சுரர்களுக்கும் நலங்கொடுக்கும் நலமே!*
*எல்லார்க்கும் பொதுவில் நடமிடுகின்ற சிவமே!*
*என்னரசே யான்புகலும் இசையுமணிந் தருளே!*

— இராமலிங்க சுவாமிகள்

இப்பாடல் திருவருட்பா என்னும் நூலிலிருந்து எடுக்கப் பட்டது. இதைப் பாடியவர் இராமலிங்க சுவாமிகள் என்பவர். இவரை வள்ளலார் என்றும் கூறுவர். இவர் மருதூரில் பிறந்தவர்; இவர் தந்தையார் இராமய்யப்பிள்ளை; தாயார் சின்னம்மை. இவர் கருணீகர் குலத்தைச் சேர்ந்தவர். இவர் சமயம் சைவம்: இவர் வடலூரில் முத்தியடைந்தார்; இவர் இருந்த காலம் 19-ஆம் நூற்றாண்டு. இவர் எழுதிய வசன நூல்கள் மனுமுறைகண்ட வாசகம், ஜீவகாருண்ய ஒழுக்கம் என்பன.

### அருஞ் சொற்கள்

*களிப்பு - மகிழ்ச்சி. கண் - அறிவு. மதி - அறிவு. சுரர் - தேவர். பொது - சபை.*

## கேள்விகள்

1. இராமலிங்க சுவாமிகளுக்குரிய வேறொரு பெயர் யாது?
2. இவர் எழுதிய இரு வசன நூல்கள் எவை?
3. இவர் சிவபெருமானை எவ்வெவ்வாறு விளிக்கிறார்?
4. இவர் வேண்டும் வேண்டுகோள் யாது?
5. அறிவு என்னும் பொருளுக்குரிய சொற்கள் எவை?
6. சிவபெருமான் யார் யாருக்கு நலத்தைத் தருகிறார்?

## பயிற்சி

1. பிரித்துக் காட்டுக.
   களிப்பருளும், கண்ணளிக்கும், வரமளிக்கும்.
2. இப்பாட்டில் ஒன்றுக்கொன்று எதிரிடையாக வந்துள்ள சொற்களை எடுத்துக் காட்டு.

# II நாட்டுப் பாடல்

*நீலத் திரைக்கடல் ஓரத்திலே—நின்று*
*நித்தம் தவஞ்செய் குமரி எல்லை—வட*
*மாலவன் குன்ற மிவற்றிடையே புகழ்*
*மண்டிக் கிடக்கும் தமிழ் நாடு.* 1

*காவிரி, தென்பெண்ணை, பாலாறு—தமிழ்*
*கண்டதோர் வையை பொருனைநதி—என*
*மேவிய யாறு பலவோடத்—திரு*
*மேனி செழித்த தமிழ் நாடு.* 2

முத்தமிழ் மாமுனி நீள்வரையே—நின்று
மொய்ம்புறக் காக்கும் தமிழ் நாடு—செல்வம்
எத்தனை யுண்டு புவிமீதே—அவை
யாவும் படைத்த தமிழ் நாடு. 3

கல்வி சிறந்த தமிழ் நாடு;—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ் நாடு;—நல்ல
பல்வித மாயின சாத்திரத் தின்மணம்
பாரெங்கும் வீசும் தமிழ் நாடு. 4

வள்ளுவன் தன்னை உலகினுக்கே—தந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு—நெஞ்சை
அள்ளுஞ் சிலப்பதி காரமென் றோர்மணி
ஆரம் படைத்த தமிழ் நாடு. 5

—பாரதியார்

இப்பாடல்களைப் பாடியவர் பாரதியார் என்பவர். இவருடைய முழுப் பெயர் வரகவி சுப்பிரமணிய பாரதியார் என்பது. இவரது பெற்றோர்கள் சின்னசாமி ஐயர், இலட்சுமி அம்மையார். இவர் பிராம்மண குலத்தினர். சைவசமயத்தினர். இவர் 1882-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் பிறந்தார். 1921-ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்தில் இறந்தார். இவர் பல நூல்களை எழுதியுள்ளார். அவற்றுள் சில, பாப்பாப் பாட்டு, பாஞ்சாலி சபதம், கண்ணன் பாட்டு முதலியன. இவர் நாட்டுப் பற்றும், மொழிப் பற்றும் நிரம்பப் பெற்றவர்.

## அருஞ் சொற்கள்

திரை - அலை. குமரி - கன்னியாகுமரி முனை (இது தென்கோடியில் உள்ளது.) வடமாலவன் குன்றம் — திருப்பதிமலை. இது வேங்கட மலை என்று கூறப்படும்.

[illegible] - நெருங்கி. பொருநை - தாம்பரபரணியாறு. முத்தமிழ் - இயல், இசை, நாடகத் தமிழ். மாமுனி - பெருமுனிவரான அகத்தியர். வரை - அகத்தியர் வாழும் பொதிகை மலை. மொய்ம்புற - வன்மைபொருந்திய. புவி, பார் - பூமி. வான் - சிறந்த. சிலப்பதிகாரம் - இது தமிழ் மொழியில் சிறந்து விளங்கும் நாடகக் காவியம்.

## கேள்விகள்

1. தமிழ் நாட்டின் எல்லை எது?
2. நம் நாட்டில் பாயும் நதிகள் யாவை?
3. அகத்தியர் வாழும் மலை எது?
4. வள்ளுவர் எப்படி உலகுக்கே உரிய புலவர் ஆவார்?

## பயிற்சி

1. "தமிழ்கண்ட தோர்வைகை" என்பதில் உள்ள வரலாற்றைக் குறிப்பிடு.
2. கம்பன், வள்ளுவன் எழுதிய நூற்களைக் குறிப்பிடு.
3. சிலப்பதிகாரம் எழுதிய ஆசிரியர் பெயரை அறிவி.
4. தமிழ் நாட்டின் சிறப்பைக் கட்டுரையாக வரைக.

# நண்டு கொக்கைக் கொன்றது

## நண்டு கொக்கை வினவுதல்

*[illegible]ன்றையு மேதின்றுடல் மிகவேவளர் கொக்கு,*
*நாளொன்றொரு பால்நண்டுதனைக்கண்டிரை கொள்ள,*
*[illegible]ங்குரு மோனங்கொடு நண்ணும்படி கண்டப்*
*[illegible]டனை 'நீயிங்குறை பண்பேதுரை?' என்ன,* 1

## கொக்கு விடை கூறுதல்

'என்னென்றுரை செய்வே னினி யானெங்ஙனமுய்வேன்?
கொன்னுந்திய வலைகாரர்கள் கூடிக்குளம் ஏரி
மன்னுந்தடம் எல்லாமிக வளைந்தேவலை வீசிச்
சின்னஞ்சிறு பொடிமீன்முதல் சேரப்பிடித் தாரே. 2

'இந்தக்குளம் நாளைக்கென எண்ணிக்கொடு போனார் ;
அந்தப்படி வந்தேபிடித் தவர்காவினில் எடுத்தே,
சந்தக்கடை தொறுமீன்மலை தானேயென விற்பார் ;
எந்தப்படி இவர்தப்புவ ? தெனவெண்ணி இருந்தேன். 3

'அந்தப்பழி காரர்வரு முனமேயொரு பாயம்
சிந்தித்தனன் நானப்படிச் செய்தாலவை உய்யும் ;
எந்தப்படி யானுமதைத் திங்கேவரு வாயேல்,
இந்தக்குளம் விட்டோர்குளம் எய்தும்படி செய்வேன்.' 4

## மீன்கள் அடைந்த ஏமாற்றம்

என்றேபக ராசன்சொல, இயல்நண்டதை நம்பி,
சென்றே பல மீனோடுரை செயவே, அவைகூடி,
'நன்றே' என வரவொவ்வொரு நடைக்கொன்று
[கொண்டேகிக்
கொன்றேசில தின்றேசில கொடும்பாறையில் உலர்த்தி.5

## நண்டு கொக்கின் கொடுமை அறிதல்

அலவன்தசை தனையுண்டிட அதையும்கொடு செலவந்
நிலமெங்கணும்மீனென்புகள் நிறைகொண்டது கண்டே
'நலதிங்கிது பல மீனையும் நனிதின்றது ; நமையும்
கொலவந்தது ; நாமுமிது கொலுமுன் கொலுவோமே.'

## நண்டு கொக்கைக் கொல்லுதல்

*அம்மாவொரு பிழையேயிது நாமுமந்த மீன்போல்*
*இம்மாவிருந் தனமேல்கொலும் இதிலேயொரு சூழ்ச்சி*
*எம்மால் வகை வருமாறுனிச் செய்வோ' மென எண்ணீ*
*அம்மாபகன் கழுத்தைக்கவை அடியால் நெருக்கியதே. 7*

## இக்கதையால் அறியும் நீதி

*நெருக்குண்டற வீழ்ந்தேபகன் நீங்கிற்றுயிர் ; அலவன்*
*இருக்குந்தலம் ஏகித்தன தினத்தோடிருந் ததுவே ;*
*செருக்கும்பகை பெரிதாகிலும் சிலதந்திர வகையால்*
*முருக்கும்படி நினைத்தாலதில் முடியாதது முண்டோ ? 8*

—வீரமார்த்தாண்ட தேவர்

இப்பாடல்கள் பஞ்சதந்திரப்பாடல்கள் என்னும் நூலில் உள்ளன. இந்நூலாசிரியர் வரலாறு அறியக் கிடைக்கவில்லை. இவருடைய செய்யுள் நடையைப் பார்க்கும்போது எளிதாக இருந்தமையின், சமீப காலத்தில் இருந்தவராகக் காணப்படுகிறது.

## அருஞ் சொற்கள்

1. ஞானம் - அறிவு. மோனம் - பேசாது இருக்கும் தவ நிலை (மௌனம்). கொடு - கொண்டு. உறை - தங்கி இருக்கின்ற. பண்பு - தன்மை. 2. உய்வேன் - பிழைப்பேன். கொன்னுந்திய - அகன்ற நீங்கிய. மின்னும் - நீர் நிரம்பிய. தடம் - குளம். 3. கால் - காலடி. இவர் - இந்தச் செம்படவரிடமிருந்து. 4. எய்தும்படி - சேரும்படி. 5. பகராசன் - கொக்கரசன். இயல் - நற்குணமுள்ள. 6. அலவன் - நண்டு. தசை - மாமிசம். நனி - மிகவும். 7. மா - பெரிய. கவை - பிளவுபட்ட. அடி - கால். வகை வருமாறு - ஒழுங்கா வரும் முறையில். 8. தலம் - இடம். செருக்கும் - கர்வப்படும். முருக்கும் படி - அழிக்கும்படி.

## கேள்விகள்

1. கொக்கு குளத்தருகே எவ்வாறு இருந்தது ?
2. 'நீ இங்குறை பண்பேதுரை ?' இது யாரால் யாரை நோக்கிக் கேட்கப்பட்டது ?
3. கொக்கு நண்டை நோக்கி என்ன கூறியது ?
4. கொக்கு மீன்கள் தப்புவதற்கு என்ன உபாயம் நினைத்திருப்பதாகக் கூறியது ?
5. கொக்கு கொண்டு சென்ற மீன்களை என்ன செய்தது ?
6. நண்டு எதைக் கண்டு வருந்தியது ?
7. நண்டு தான் செய்த தவற்றிற்காக என்ன எண்ணியது ?
8. கொக்கின் கதி என்ன வாயிற்று ?
9. இக்கதையால் அறியும் நீதி யாது ?

## பயிற்சி

1. இக்கதையைச் சுருக்கி எழுது.
2. காவடி, கொக்கு, நண்டு, குளம், இவற்றைக் குறிக்கும் வேறு சொற்களைக் குறிப்பிடு.

# III. பல்சுவை

## திருவெண்ணெய் நல்லூர்வளம்

*மோட்டெருமை வாவிபுக முட்டுவரால் கன்றென்று*
*வீட்டளவும் பால்சொரியும் வெண்ணெயே—நாட்டில்*
*அடையா நெடுங்கதவும், 'அஞ்ச'லென்ற சொல்லும்*
*உடையான் சடையப்பன் ஊர்.*

— கம்பர்

கம்பர் பெரும் புலவர். இவர் எழுதிய நூலே கம்பராமாயணம் என்பது. இவர் திருவழுந்தூரில் உவச்சர் குடியில் பிறந்தவர். ஏறக்குறைய 800 வருஷங்களுக்கு முன் இருந்தவர். வைஷ்ணவ சமயத்தவர்; இவர் மகனே அம்பிகாபதி. இவரை ஆதரித்தவர் சடையப்ப வள்ளல். நன்றி காட்டவே இவ்வாறு அவனையும் அவன் நாட்டையும் புகழ்ந்து பாடினர்; இப்பாடல் தனிப்பாடல் திரட்டில் உள்ளது.

## அருஞ் சொற்கள்

மோட்டெருமை -பெருவயிற்றையுடைய எருமைமாடு. வாவி-குளம். வரால் - வரால்மீன். வெண்ணெய் - திருவெண்ணெய் நல்லூர். அஞ்சல் - பயப்படாதே.

## கேள்விகள்

1. எருமை பால் சொரியக் காரணம் யாது?
2. சடையப்பன் எவ்வெவற்றையுடையவன் ?

## பயிற்சி

1. பிரித்துக் காட்டு :— மோட்டெருமை, வீட்டளவும்.
2. 'அடையா நெடுங்கதவு' என்பதால் நீ அறிந்து கொண்டதை விவரி.
3. சடையப்பனைப் பற்றி மூன்று வாக்கியங்கள் எழுது.

## உழவர் பெருமை

*வேதநூல் முதலாகி விளங்குகின்ற கலையனைத்தும்*
*ஓதுவார் எலாரும் உழுவார்தம் தலைக்கடைக்கீழ்*
*கோதைவேல் மன்னவர்தம்குடைவளமுங் கொழுமுனையே*
*ஆதலால் இவர்பெருமை யாருரைக்க வல்லாரே ?*

— கம்பர்

## அருஞ் சொற்கள்

நூல் - சாஸ்திரம். கலை - கல்வி. தலைக் கடை - வீட்டு வாசலில் சென்று நிற்க வேண்டியவர்களே. கோதை - மாலை. கொழு - ஏர்க்கால் முனையில் உள்ள இரும்பு.

## கேள்விகள்

1. யார் யார் உழவர்களை நாட வேண்டியவர்கள் ?
2. ஓதுவார் யாவர் ? அவர்கள் ஓதுபவை யாவை ?
3. மன்னவர் குடைவளத்திற்கு வளந்தருவது எது ?

## பயிற்சி

1. இப்பாடலில் காணப்படும் பழமொழியை எடுத்து எழுது.
2. கலை இத்தனை எனக் கேட்டுக் குறிப்பிடு.
3. கம்பர் உழவர்களைப் புகழும் முறையைச் சுருக்கி எழுது.

## சமையல் வகை

*சற்றே துவையலரை; தம்பியொரு பச்சடிவை ;*
*வற்றலேதேனும் வறுத்துவை;—குற்றமில்லை ;*
*காயமிட்டுக் கீரைகடை; கம்பமென வேபிளகுங்*
*காயரைத்து வைப்பாய் கறி.*

—சிவஞான முனிவர்

சிவஞான முனிவர் விக்கிரமசிங்கபுரம் என்னும் ஊரில் ஆனந்தக்கூத்தர், மயில் அம்மையார் ஆகிய இருவருக்கும் ஏறக் குறைய 160 வருடங்கட்குமுன் தோன்றினர். இவர் வேளாள மரபினர்; சமயம் சைவம். தம் சமையல்காரன் இன்று என்ன

சமையல் செய்யவேண்டும் என்று கேட்டபோது இப்பாடலைப் பாடினார்.

## அருஞ் சொற்கள்

*காயம் - பெருங்காயம். மிளகுக்காய் - மிளகாய்.*

## கேள்விகள்

முனிவர் செய்யச்சொன்ன கறிவகைகள் எவை?

## குறத்தி மலைவளம் கூறல்

*திங்கள்முடி சூடுமலை; தென்றல்விளை யாடுமலை;*
*தங்குபுயல் சூழுமலை; தமிழ்முனிவன் வாழுமலை; [னப்*
*அங்கயற்கண் அம்மைதிரு அருள்சுரந்து பொழிவதெ*
*பொங்கருவி தூங்குமலை; பொதியமலை என்மலையே.*

— குமரகுருபரர்

இதனைக் குமரகுருபர சுவாமிகள் பாடியுள்ளார். இவர் திருநெல்வேலியை அடுத்த ஸ்ரீவைகுண்டம் என்னும் இடத்தில் பிறந்தவர். இவர் தந்தையார் சண்முகதேசிகர். வேளாள மரபினர்; சைவ சமயத்தவர். குமரகுருபரர் ஐந்து வயது வரை ஊமையாக இருந்து, பிறகு திருச்செந்தூர் முருகப்பெருமான் திருவருளால் ஊமை நீங்கப் பெற்றார். அதன் பிறகு பல நூல்களை இயற்றினார். நீதிநெறி விளக்கம், சகலகலாவல்லி மாலை, மீனாட்சியம்மை குறம், பிள்ளைத்தமிழ் முதலியவை இவர் எழுதிய நூல்கள். இப்பாடல் மீனாட்சியம்மை குறம் என்னும் நூலில் உள்ளது.

## அருஞ் சொற்கள்

*திங்கள் - சந்திரன். புயல் - மேகம். தமிழ்முனிவன் - அகத்திய முனிவன். அங்கயற்கண் அம்மை - மீனாட்சியம்மையார். தூங்கு - அசையும்.*

## கேள்விகள்

1. பொதியமலை எங்குள்ளது ?
2. இம்மலை உயரமானது என்பது எப்படித் தெரிகிறது ?
3. தென்றல் எத்திசையில் இருந்து வரும் காற்று ?
4. அருவிக்குக் கொடுக்கப்பட்ட உபமானம் யாது ?
5. அகத்தியருக்குத் தமிழ்முனி என்று ஏன் பெயர் வந்தது ?